சென்னைச் செய்தி:- நவம்பர் 52

* காப்பிக் கொட்டை: இந்தியாவில் ஆண்டொன்றுக்கு 20000 டன் காப்பி உற்பத்தியாகிறது.
* வருடந்தோறும் சிக்கரி 10000 அந்தர் இறக்குமதியாகிறது * ரெஸ்க்யூ ஹோம், அதன் ஆரம்
பம் முதல் ஸ்திரீ ஸதனம் என்றழைக்கப்படுகிறது: இது விபசாரத் தடைச் சட்டத்தின் 7வது
8வது பிரிவுகளின் கீழ் நடந்து வருகிறது; இதில் விபசாரத் தடை சட்டத்தின் 6 (1வது) செக்
ஷன்படி விபசார விடுதிகளிலிருந்து போலீஸாரால் மீட்கப்பட்ட 18 வயதுக்குட்பட்ட பெண்
கள் மேற்படி சட்டத்தின் 6 (2) செக்ஷன்படி மாஜிஸ்ட்ரேட்களால் இந்த ஸ்தாபனத்தின் பாது
காப்புக்கு மீண்டும் வருடம் முதல் ஒரு வருடத்துக்கு அனுப்பப்படுகிறார்கள். இது தவிர ஒழுக்
கந்தவறிவிட்ட பெண்கள் அல்லது ஒழுக்கந் தவறுவதும் ஆபத்திலிருக்கும் பெண்கள் தாங்
களாகவே இந்த ஸதனத்தின் பாதுகாப்பைக் கோரலாம். இது மைலாப்பூர் கச்சேரி ரோடி
* லுள்ள "வெல்ஸ்" என்ற பங்களாவில் இருக்கிறது * விஜிலன்ஸ் ஹோம்: இந்த ஸ்தாபனம்
போல் வேறு எங்கும் கிடையாது. இதில் விபசாரத் தடை சட்டத்தின் 12-எ(1) செக்ஷன்படி
ஜெயில்களில் தண்டனை கொண்டு ஆண்களைச் சோரம் செய்ய அழைத்தல், விபசாரம் செய்தல்
போன்ற குற்றங்கள் புரிந்ததற்காக மாஜிஸ்ட்ரேட்களால் தண்டனை விதிக்கப்பட்ட
30 வயதுக்குட்பட்ட பெண்கள், கோர்ட் உத்தரவுப்படி பாதுகாப்புக்காக இரு வருடங்கள் முதல்
மூன்று வருடங்கள் வரையில் சேர்த்துக் கொள்ளப்படுகிறார்கள் * உங்களுக்குத் தெரியுமா?
* 1951-52 ல் அபிவிருத்தித் திட்டங்களுக்காகச் செலவிடப்பட்ட மொத்தத் தொகை ரூ 317 கோடி
யாகும். இந்தத் தொகையானது மத்திய, ராஜ்ய சர்க்கார்களின் மொத்த செலவு வருமானத்தில்
* மூன்றில் ஒரு பங்குக்கு அதிகமாகும் * இந்தியாவின் ஒரு வருஷத்தில் பெய்யும் மழையின் மொத்த
அளவு சுமார் 275 கோடி ஏக்கர் கன அடியாகும்; இதில் 135 கோடி ஏக்கர் கன அடி நதிகள் மூல
* மாக கடலில் போய்ச் சேர்ந்து விடுகிறது * இந்தியாவில் சென்னை ராஜ்யத்தில்தான் முட்டை
உற்பத்தி அதிகம். இந்த ராஜ்யத்தில் ஆண்டு தோறும் மொத்தம் சுமார் 25.2 கோடி முட்டைகள்
உற்பத்தியாகின்றன. ஆனால், முட்டைகள் அதிகம் உபயோகிக்கும் இடம் திருவாங்கூர்-கொச்சி
தான்; வருஷம் ஒன்றுக்கு நபரொன்றுக்கு சராசரி 19 முட்டைகள் வீதம் உபயோகிக்க
ப்படுகிறது. மிகக் குறைவாக [illegible] உபயோகப்படுவது மத்திய பாரதத்தில்; வருட
* மொன்றுக்கு நபரொன்றுக்கு சராசரி ½ முட்டைகள் வீதம் உபயோகமாகிறது * 1951-52ல்
ஏற்றுமதி செய்யப்பட்ட சாமான்களின் மொத்த மதிப்பில் சுமார் 13 சதமானம் இந்திய
த் தேயிலை ஏற்றுமதியேயாகும்; இதற்கு அடுத்தபடியாக சணல் சாக்குகோணிக
* ளாம். மொத்த ஏற்றுமதியில் அவை 4.07 சதவிகிதமாகும். * இந்தியாவில் வசூலிக்கப்படும் வரு
மானவரியில் பாதிக்கு மேற்பட்ட தொகை சூப்பர் வரியிலும் கிடைப்பதாகும்; 1950-51ம் வருஷத்தில்
வருமானவரியாக வசூலிக்கப்பட்டது 94.80 கோடி ரூபாய்; இதில் சூப்பர் வரியாக வசூலிக்கப்பட்ட
* தொகை 60.23 கோடி ரூபாய் ஆகும். * இந்தியாவில் பால் மிகவும் அதிகமாக உபயோகிக்கப்
படுவது பஞ்சாபில்தான். இங்கு நபரொருவருக்கு நாள் ஒன்றுக்கு 17 அவுன்ஸ் பால் கிடை
க்கிறது. பால் குறைவாக உபயோகிக்கப்படுவது அஸ்ஸாமில்; இங்கு நபரொன்றுக்கு
* நாள் ஒன்றுக்கு ஒரு அவுன்ஸ்க்கு சற்று அதிகமாகச் செலவாகிறது. * இந்திய ரயில்வே
க்களில் நாள் ஒன்றுக்கு சராசரி 3877 பிரயாண வண்டிகள் ஓடுகின்றன; 3,129,430
* பிரயாணிகள் பிரயாணம் செய்கின்றனர் * இவ்வருடம் மிகவும் அதிகமான அளவில்
அரிசி கொள்முதல் செய்யப்பட்டது சென்னையில்தான்; இங்கு மொத்தம் 631450 டன் அரிசி
கொள்முதல் செய்யப்பட்டது. கோதுமை மிகவும் அதிகமாகக் கொள்முதல் செய்யப்பட்டது உத்தர
* பிரதேசத்தில்; இங்கு 290500 டன் கோதுமை கொள்முதல் செய்யப்பட்டது * க்ஷய ரோகம்:
நம் நாட்டின் ஜனத் தொகையில் லட்சத்தில் 1,000 பேருக்கு க்ஷய ரோகம் இருக்கிற
தென்றும், வருஷத்தில், லட்சத்தில் 200 மரணம் ஏற்படுகிறது. இது காலத்தில் இளை
ஞர்களும் நகரங்களில் அதிகமாயும் இருக்கிறார்கள். இந்தியாவில் இந்த ரோகத்தால்